உ

ஸ்ரீ சற்குருவே நம:



# ஸ்ரீ ஆத்மானந்த சுவாமிகள்

இயற்றிய

# திருப்போரூர்,

# ஸ்ரீசிதம்பரதேசிகரந்தாதி.



மதுரை வடக்குமாசிவீதி

மனோன்மணி விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

1929.

—

உ

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

ஸ்ரீ ஆத்துமாநந்த சுவாமிகளியற்றிய

திருப்போரூர்,

# ஸ்ரீ சிதம்பரதேசிகரந்தாதி.






இஃது

இந்நூலாசிரியரால்

பார்வையிடப்பெற்று

மதுரை

மனோன்மணி விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது,

1929.

ஸ்ரீசற்குருவே நம:

# திருப்போரூர்

# ஸ்ரீ சிதம்பரதேசிகரந்தாதி.



## மங்கலம்.

சீர்பெருகு போரூர்ச் சிதம்பரதே வற்கணியும்
நார்பெருகந் தாதிக்கு நன்மைதரும்—பார்மே
னடக்குஞ் சயிலமென நாற்புயங்கொண் டோங்கு
கடக்குஞ் சரத்தின் கழல்.

## நூல்.

சொல்லும் மனமுந் தொடாத சோதியுமற்
றெல்லாமு மெங்கு மிருப்பானு—நல்லதிருப்
போரூரிற் புல்லைப் புரிந்தாண்ட புண்ணியனே
யாராயின் வேறென் றலன். (1)

அல்லும் பகலுமுன தம்புயப்பூ வின்பதமே
புல்லிக் கிடந்தின் புறுதலின்றி —வல்லவெறி
நாய்போ லலைந்துமன நைதனன்றே போரூரிற்
றுய்போ லருளியவெந் தாய். (2)

தாயும் பிதாவுந் தமருந் துணையுமெனக்
காயும் பொருளுநினை யன்றியுண்டோ—தியவிளங்
கன்றினையு மீன்றவான் காத்தலெனப் போரூரி
லன்றேடி வந்தாண்ட வா. (3)

ஆதிநா னொன்று மறியேற் கமனுரி
லேதுமின்றி யொன்று மிருப்பளித்தா—பாதினியான்
செய்வேன் பிறிதுஞ் செயனுமிலே னுபினே
னையா சிதம்பரதேவா. (4)

வாவிதிகழ் போரூரா மன்னியுளச் சற்பகப்பூங்
காவாய் விருப்பங் கனையுதவித்—தேவனையே
நம்படியே னுமுடிக ணற்புகழும் பொற்பமையுஞ்
செம்பதமுந் தாங்கவருள் செய். (5)

செப்யாய்போ ரூரமருந் தேசிகசி காமணியே
பொய்பரிடம் பொய்யாய்ப் பொருந்திநின்று—மெய்பருளம்
போக்கு மிடத்தின் புருவாய்ப் பொலிகின்றுப்
நீக்கமிலா வின்வடிவ நீ (6)

நீநா னெனனும்பேத நீக்கியொன்று நிற்கவைத்த
கோனேபோ ரூரகினைக் கூடாதே—கானற்
றெரிநீ ருலகமெயாச் சிந்தித் துழன்றே
இருங்கதியுற் றார்க ளெவர். (7)

எவ்வாறு முத்திநிலே யெய்துமென வெண்ணிமன
நைவேனைப் போரூரெந் நாதரந்நா—ளெவ்வமெலாம்
போக்கிமுழு தாண்ட புதுமை புகலரிதே
வாக்கும் மனமுஞ் செலா. (8)

செல்லாமற் செல்வரிடஞ் சென்றெதையே னுங்கொடுக்கச்
சொல்லாமற் றன்னடிக்கே தொண்டாக—வெல்லாங்
கெடுத்தேக னாகக் கிருபைப்போ ரூரன்
றடுத்தான் டருளியது தான். (9)

தடுத்தாளுங் காலிடவத் தத்தா லணைத்தே
யெடுத்துச் சியில்வலக்கை யேற்றிப்—பிடித்துரைத்த
சொல்லமரு ரையா தொழும்பனுளத் தேமுளைத்து
நல்லகனி நல்கியதிந் நாள். (10)

நாளவமே போக்காதே நன்னெஞ்சே போரூரன்
றுளே நல்லக்கனியாத் தாங்கியவ—னுளெனவே
வாய்ப்பறைகொண் டார்க்கின் வருஞ்சமனுங் கண்டகல்வா
னுய்ப்பொருந்த வஞ்சுவா னுல். (11)

ஆதரித்தா னெஞ்சே யமரூரெம் மாதியின்று
ணீதரித்து நிற்க நிழலளிக்குந்—நீதறுசி
ராகந்த நல்குமப்பா லத்துவித பூரணமெய்ஞ்
ஞானமுமாய் நின்பா னனும். (12)

நன்றுசீர்ப் போரூரெந் நாதனவி னல்வாக்கை
யென்றுதொறு முள்ள மிளகுமாற்—புன்மே
மருவுடல்கம் பிக்கும் மயிர்க்குச் செறியு
மிருவிழியு நீர்சொரியு மே. (13)

ஏவாருங் கோவார்பா லின்பாவ தெம்போரூர்த்
தேவனடி தீண்டாத சென்னியர்க்காம்....பூவா
ரடிமுடியின் மேலணியு மன்புடையார்க் காழிக்
கடுவே கடுத்திலகுங் காண். (14)

காணப் படுவதுவுங் காணப் படாததுவும்
பேணப் படாதவெறும் பேரேயாங்....காணும்
பொருளேநீ போரூரெம் பூரணனே பொய்த்த
மருளேயா மற்றோர் மதி. (15)

மதிபெற்ற மெய்யடியார் வாழ்வே போ ரூரிற்
றுதிபெற் றிலகுசுயஞ் சோதீ....திதிபெற்ற
வுன்சொருபங் கண்ட வுடனனிய மோடினவே
லென்சொருபம் யாதா யிடும். (16)

இடும்பை யிடும்பை யெழுதா தியற்றில்
குடும்பக் குழாஞ்சுமக்குங் கூலி....யுடம்பினையே
நானென் றழிந்தேனை நற்போரூ ரெந்தையறி
வானந்த மாக்கினா னல். (17)

ஆக்கன்முத லைந்தொழிலுஞ் செய்து மசலனாய்
நீக்கமிலா தெங்கு நிறைந்துநின் றுங்....காக்கவெனைப்
போரூரி லன்றோர் புருடன்போ லாண்டாய்நின்
சீர்கண்டேற் கியாது செயல். (18)

செயனுன் றிருவடிக்கீழ்ச் சேவையே யன்றி
யயலொன் றறியா தடங்கு....மியலொன்றே
வேண்டுஞ் சமரூர் விளங்கும் விளக்கொளியே
யாண்டோ விசையு மிசை. (19)

இசைத்தவிசை யொன்று மிருவினையோ டொன்ற
வசைத்தபுர மூன்று மழித்துந்....திசைநான்கும்
போர்த்தபுகழ்ப் போரூர புண்ணியனென் பேரடைதி
நிர்த்தவிதுன் செய்கைத் திறம். (20)

திறம்வேண்டி னல்ல செயல்வேண்டிற் சேமம்
பெறவேண்டிற் செத்துப் பிறவா ....நெறிவேண்டிற்
செய்யதிருப் போரூர்ச் சிதம்பரப்பேர்த் தேசிகர்க்கு
மெய்யடிய ராகிவிடு மின். (21)

மின்னிப் பொழிகாள மேகமே வேறுகா
தென்னி லிலகு மிளங்கதிரே....மன்னுவளம்
பூத்ததிருப் போரூரிற் பொன்னே கடைப்போகக்
காத்த லுனக்கே கடன். (22)

கடங்காத்து நல்லோர் களாவியற்றி வைத்த
மடங்காத்து மாய்ந்த மடந்தீர்த்....திடும்போரூ
ரெந்தாய் நிருவிகற்ப வின்பமிட்டை நீங்காத
மைந்துசிந்தைக் கெய்தவருள் வாய். (23)

வாய்க்கும்ப லாற்றுன் வருமேன்மே லாகவின்ப
நோய்க்கும்ப னீங்கி நொறுங்குமே....தாய்க்கும்ப
லென்மடங்கு செய்தயையா னேர்ப்போரு ரெம்மான்று
‡ளுண்மடங்கி நெஞ்சே யுனு: (24)

உன்னியுன்னிப் பார்த்து முறுமையினுற் போரூரின்
மன்னிறைதா னீங்க மதியாதே....நன்மனமே
நீகோண்டற் கொல்லா னிழலளிப்பா னின்றதன
தாகார மாகையுன்வாழ் வாம். (25)

ஆமெனவு மொன்றையிது வல்லவென வுங்கூறி
நாமா தியிலழுந்து நாட்டமதா—லேமந்த
புத்தியுளார் வாய்ப்போர் புரிந்திறப்பார் போரூரான்
பத்தரது கண்டுநகைப் பார். (26)

பாராதி பூதப் பரப்பாய்ப் பரந்துநின்றும்
பேராதி யொன்றுமில்லாப் பேரொளியே—சீராதி
யோங்கு சமரூ ருடையா யுளமுனடி
நீங்கா தமையவரு ணீ. (27)

நீயாரென் பார்க்கெதிரே நிற்பதுட லென்னுது
நாயினுங்கீ ழாய்நான் நரனென்று—பேய்பிடிக்கப்
பட்டேன்போற் கூறும் பழியையம ரூரிலத்தந்
தொட்டழித்தாய் நீயே துணை. (28)

---

‡உள்-ஏழனுருபு.

துணையென் றடைந்தேன் றுயரொழித்தா ளென்று
மிணையொன்று மில்லாத வேகா....பணையொன்று
பூம்பொழிலார் போரூரிற் பூரணனே யாரணமுங்
காண்பரியா யுன்றன் கழல். (29)

கழலடைந்த நாயேன் கடும்பவநோய் வித்தை
யழலடைந்த பஞ்சி னழித்தாய்....நிழலடைந்த
வாரத்த மொன்றின் டமரூரா செய்கொடுமை
சாரா து சாரவரந் தா. (30)

தாவும் பரிகளாச் சத்தாதி வீதிகளின்
மேவித் திரிய *விரையடக்காய்....நாவொன்றுந்
தென்சா ரமரூரிற் றேசிகா செப்பரிய
வுன்சீரே பாடியுவக் கும். (31)

கும்பிமதங் கொண்ட குணம்போன்முன் வாசனையால்
வம்பிழைக்குங் கெட்ட மனங்கெடவே....நம்படியார்
மேவுதிருப் போரூர் விளங்கொளியே மெய்மருந்தாஞ்
சேவடியே தந்தருந்தச் செய். (32)

செய்வா சனைக்கேடு தியமனக் கேடொருங்கே
யையாம லீண்டுமின்ப நண்ணவே....மெய்யடியார்
குழக்கிறைந் தார்த்துத் துதிபுரிந்து கொண்டாட
வாழுஞ் சமரூர் மனே. (33)

* விரை—வாசனை.

மன்னேயே மங்கா மணிவிளக்க வான்சுடரே
தன்னேரி லாயெனைமுன் றந்ததந்தா....யன்னே
திருப்போரூர்ச் செல்வா சிதம்பரதே வாவுன்
னிருப்பேயா மெங்கு மெலாம். (34)

எல்லாநீ யென்னிலெனை யாரென்பே னியானென்னி
லல்லவென வத்துவித மாண்டழிவு....புல்லுதலா
லோங்குபுகழ்ப் போரூரா வுள்ளமுறை யோய்ந்துநிற்ற
னீங்காத பாங்கா நிலை. (35)

நிலையாகக் கண்டவெலா நின்றகனுப் போல
விலவாக வுள்ளதுள்ள தேயா....யிலகுகின்ற
தெந்தை சமரூரி லேயாண்ட வன்றமுத
லுய்ந்தே னுவந்தே னுளம். (36)

உள்ளத் திருந்தின் புணர்த்தியுனை யுன்னுத
கள்ளருள்ளத் துள்ளே கரப்பவனே—கொள்ளவருள்
போரூ ரிறைவாநின் பொன்னடியி லெந்நாளு
நாரூற வேண்டுகின்றே னன். (37)

நானு யிருந்தநடந் தேன்முதல நற்போரூர்க்
கோனுண்ட நாளேயக் *கூறொழிய—நானேநா
னுயினேன் மற்றவைக ளங்காதி யென்றயலாய்ப்
போயினவென் னுலறியிப் போது. (38)

---

* கூறு-அத்தியாசபாகம்,

போதாவே தாந்தப் பொருட்சுகா போரூரென்
றுதா நினைப்பாட காதாவே—சிதா
சிதம்பரதே வாகினது செந்தா மரைத்தா
ளிதஞ்சார்ந்து நெக்கிடநன் னெஞ்சு (39)

நெஞ்சமே சிவித்து நிற்க விரும்புதியேன்
மஞ்சுதாழ் மாட வரிசைசூ—ழுஞ்சமரூர்த்
தாயனையான் செம்பதுமத் தாளிணையை நீங்காது
நேயமுட னேசுமந்து நில். (40)

நில்லா வுடலை நிலையென்று போற்றியுன்றுட்
புல்லாத புல்ல¶சிதம் போயொழிய—நல்ல
சமரு ரிறைவாநின் றுளடியார் நாளுந்
தமராகிச் சூழவரு டா. (41)

தாவுந் தொழில்கற்றென் பெற்றுய் சதுர்த்தசமாய்
மேவும் புவனமெலா மேல்கீழு—சாவியயன்
மாலேதுன் புற்றுர் மனமேபோ ரூரிறைதாள்
*மேலடங்கி யின்பாய் விடு. (42)

விடுகின்று யில்லை விடயங் களில்வீழ்ந்
தடுகின்ற திப்பதங்க மாகிக்—கெடுமனமே
யிதோ சுகம்போரூ ரெந்தை கழனிழலிற்
றீதற் றிருப்பதுவோ செப்பு. (43)

---

¶இதம்--சிநேகம், *மேல்--எழனுருபு.

செப்புகின்றே னுன்றனன்னெஞ் சேயின்பஞ் சேருவழி
தப்புமொழி யன்று சமரூர்வா—மூப்பன்
றணைத்தா டணைசார் துயரின் விடயந்
தனைக்கும் பகையாந் தவிர். (44)

தவிருந் துயரஞ் சமரூரி லெந்தை
யவிரு மலர்த்தாளி லன்பாய்க்—கவரின்றிப்
புல்லிக் கிடக்குநிலை பூணுதிநெஞ் சேயதனை
வெல்லுந் தரம்பெருகு மே. (45)

மேவாரா வார்கள் விளங்கமரூ ரெந்தைசரண்
மேவா தவர்களே மேவினர்—நாவார
அன்னவன்சீர் பாடியவ னங்கிரியம் போருகப்பூ
மன்னுமது வண்டாகு வார். (46)

வாரானே யந்தகப்பேர் மன்னுவோன் முன்னுளி
லோரன்பன் பானுற் றுதையுண்டு—தீர்வருந்துன்
புற்று னதனுலே யொன்போரூ ரெந்தைதா
ளிற்று முடியா ரிடம். (47)

இடமாகு மெல்லா மெனும்பொருள்கட் கஃதே
படர்கற் பனைக்குப் பகையாய்—மடமுடைக்கு
மிம்மா நிலம்புகழு மேராரும் போரூர்வா
ழும்மானெம் மாரு மடி. (48)

அடியார்க் கடித்தொண்ட னாகேனம் பொற்றாண்
முடிசூடி யஞ்சலித்து முன்னின்—றிடையிடைநின்
சீருந் துதியேன் சிதம்பரா வென்னேனைப்
போரூரி லாள்வற் புதம். (49)

புதிதொன் றெழுந்திப் புவனம் விழுங்கி
இதுவென்ற வெல்லா மிறப்பித்—ததுவேயாய்ப்
பூரணவின் பாகிப் பொலிகின்ற தேற்போரூ
ராரணா நானார்நீ யார். (50)

யாவ ரெதுசொலினு நற்புகழார் பொற்போரூர்த்
தேவன்சொற் போலின்பஞ் செய்யுமா—பூவில்
வருந்துன் பனைத்தினையு மாற்றுமா சாவா
மருந்தா யிருந்துதவு மா. (51)

மாவெல்லஞ் சார்ந்து மதுரகுணம் பெற்றதுபோ
லேவிரியைம் பூதாதி யெல்லாமு—மோவலிலா
நின்னை மருவி நிகழ்வனவான் போரூரா
வுன்னிற் பிரியினுள வோ. (52)

ஓங்கவென வுள்ள முறைத்தொளியா யோருருவந்
தாங்காது நிற்குந் தலங்கண்டார்—தேங்கு
புனல்வளஞ்செய் போரூரிற் பொல்லா மணிதாள்
வனமறிந்தா ரெம்முறவா வார். (53)

வாரியையோர் கான்முன் மடுத்துவிட்டான் சன்னுவென
லோர்பெரிதோ வெல்லா வுலகுகளு—நேரறிய
நித்தியந்த னுள்ளடக்கி நெஞ்சு விடல்பெரிதோ
மத்தியஞ்சொல் போரூர் மனே. (54)

மனனே சலித்து மழுங்கா தமரு
ரினனே ரறவொளிரு மெம்மான்—றனதெதிருஞ்
சென்றிடா தாண்டே யடங்கிடுதி சேவடியி
னொன்றி யுடனதுவே யாய். (55)

ஆகுதியா கம்பலசெய் தாலமரு ரம்மான்றுட்
பாகுதிக மூன்பற் பமேபதியு—மோகமற
வெந்நாளு நீங்கா தியையி னெழுமின்பஞ்]
சன்னமா கூறத் தகா. (56)

தகாமை சமரூர்வாழ் தந்தைதாட் குள்ள
நெகாமையுட லாதிகளி னின்று—பகாமை
தகுதி யவன்றுளிற் சார்ந்தயனுன் ஞமே
பகுதி யறநிற் பதாம். (57)

பதாம்புயவின் பத்தேன் பருகுவண்டொப் பன்ப
ரிதாகிதமுந் தாழ்வுயர்வு மெண்ணார்—சதாவறிவா
யுய்யுநெறி நிற்பா ருவர்ப்புவர்ப்பி லொன்றூர்கள்
செய்யசம ரூர்த்தே சிகன். (58)

கெரந் திருத்தாளிற் சேர்ந்துதினந் தாழ
வகமுன்பே ரன்பி லழுந்தி—நெகிழ்வடையக்
கண்ணுனையே கண்டு களித்தமுத மேபெருக்கப்
பண்ணுநிபோ ரூரிற் பரா. (59)

பராபரமாய் நிற்கும் பரசுகா வேகா
நிராமயநி ராலம்ப நித்தா—புராதனனே
விண்ணுடி யோடி விரிபொழில்சூழ் போரூரி
லண்ணு வெனைமுழுது மாள். (60)

ஆளா தொழியா வெனினு மடர்படர்க
ளீளா தொழியு நெறியறியேன்....வாளா
விருக்கின்றே னுற்றூலென் செய்வேன் றவிர்த்தா
டிருக்கிளர்போ ரூர்நித் தியா. (61)

தியாதா தியானந் தியேயமெனு மூன்றும்
மெயாயல்லை பாய விமலா—தயாநிதியே
யன்பர்க் கமுதா னவனே யமரூரா
வின்புதவு நின்பதமிங் கீ. (62)

ஈயென்று கேட்கு மியல்பில்லா வேளையும்
நீயுவந்தன் றுண்டுன் னிலையுதவி—ஞயே
னுடலாதி யுன்னுடைமைக் கொண்சமரு ரெந்தா.
யிடரார் தவிர்ப்பா ரினி. (63)

இனியா ரினியா ரெனக்குநீ யன்றி
யனியாய மாம்வே றறையிற்—றுனியுறுமே
லோலமிடு வேனன்றி யொன்றறியேன் போரூரா
காலடைந்தேற் கென்னே கதி. (64)

கதிகூட்டு மெய்யடியார் கட்கழியா நல்ல
நிதிகூட்டுந் துக்கமெலா நீக்கும்—மதிகூட்டும்
வம்பார் மலர்ச்சோலை மன்னுசம ரூரிறைவ
னம்போ ருகப்பூ வடி. (65)

அடிப்போதி லன்புருனை யாநந்தத் தாலே
படித்தாடிக் கூடிப் பரவுங்—கடிப்பொழில்சூழ்
தென்போரு ராவெனைமுன் றேடிப் பிடித்தாண்ட
தன்பகற்றித் துன்புறுத்தற் கா. (66)

காக்கின்று யென்னிற் கடிய மனக்குரங்குன்
பூக்கழலை விட்டுப் புறம்போமோ—தேக்குறுபே
ரானந்த மன்றி யடையுமோ போரூசிற்
கோநந் திடாநற் குணு. (67)

குணக்குன்றே போரூர்க் குருபரா வின்ப
மணக்கும் பதாம்புயப்பூ வண்டா—யிணக்கமுற
நிற்கு நிலையினையிந் நெஞ்சு சமரூரா
கற்குமெளி தானவழி காட்டு. (68)

காட்டு மிருகமெனக் கட்டுவிட்ட நாயென்ன
வோட்டம் பிடிக்கு முளமடக்காய்—நாட்டுபுகழ்
புல்லுங் திருப்போரூர்ப் பூரணபு ராதனனே
நல்லுதவி யாமீதிந் நாள். (69)

நாளுக்கு நாளினிக்கு நற்கரும்பே நாயேனை
யாளு மமரு ரரசேநின்....ருளருளா
யன்புமீக் கூர வகமசைவி லாதடங்கி
யின்புருவா யொன்று யிட. (70)

இடராம் விடயத் திடைநாடி யோடிப்
படருற்று வாட்டப் படுகை....விடுமனமே
சீராரும் போரூர்ச் சிதம்பரதே வன்றிருத்தாள்
வாரிசப் பூவா வையேல். (71)

வையா கரணமெலாங் கற்றால் மனந்துயரா
ளையாம லுய்யுநிலை நல்குமோ....வையா
சமரு ரிறைவாநின் றுணிமலி லன்புற்
றமையுநிலை யொன்றே யலால். (72)

அல்லா மவித்தை யவித்ததுபோ லற்பதுன்பு
நில்லா தொழித்திந்த நெஞ்சினுக்கு....நல்லதிருப்
போரு ரரசேநின் பொற்றுளில் வற்றுத
வாரா தரந்தருதி யால். (73)

ஆலைக் கரும்பா யகந்துயரா னையாதன்
காலருளிக் காலன் களிப்படைய—மேலோர்கள்
சூழ்ந்துதொழப் போரூரிற் றாயசிதா காயமதாய்
வாழ்ந்துவரு தேசோ மயா. (74)

மயல்கெடுத்தாய் துட்ட மதிக்கதிக தீய
வியல்கெடுத்தாய் நன்றே யெனினும்—முயல்கெடுக்குந்
துன்பங் களையேன் றுடைக்கின் றிலைபோரு
ரென்பரமா நந்தா விசை. (75)

இசைவாக வுன்ற னினனடியென் சென்னி
மிசைநிறுவி யல்விடயம் வீட்டி—நசையின்ப
மொன்றிலே யோங்க வுளமுவப்பச் செய்தியால்
வென்றிபெறு போரூர் மெயா. (76)

மெய்யென்ற பேராலே மேவுடனு னென்றிருந்த
மையலினை மாற்றியதை மாறுக்கி—யையன்
சமரூர னம்மெய் சடமென் றொருபே
ரமையுமது வுங்காட்டி னான். (77)

ஆனு வமுதே யடியார் மிடிகெடுத்து
வானோர்க் கரியசுக வாழ்வருளுங்—சோனே
சகநா யகனே சமரூரில் வாழ்தே
சிகநாய காகிருபை செய். (78)

செய்வித்தாற் செய்வேன் செயலொழித்துன் றுணிமலி
லய்வித்தா லய்வேன்வே றென்றறியே—னையா
திருவுளத்தா னல்லவருள் செய்யமரூர் வாழ்வே
யொருதமியே னின்புற் றய. (79)

உய்யுநெறி யாதென் றுளமேநீ கேட்கினம
தையன்போ ரூரினமை யாண்டவனை—மெய்யாரச்
சூழ்ந்து புகழ்ந்து துதிசெய்தட் டாங்கமுறத்
தாழ்ந்தின் புறுவதே தான். (80)

தானுய் முழுதுமாய்ச் சாரு முழுமுதலாய்க்
கோனுய்ப் பொதுவினின்றைங் கூத்தாடு— வான்முறையே
0பாட்டி யருள வமரூரி லங்நாளிற்
கூட்டி யெனையாள் குரு. (81)

குருபக்தி யில்லாக் கொடியே னெனினு
மருகுறலா காதென் றகற்றிற்—பெருகுபழி
யுன்பாலா மெல்லா முணர்ந்தாண்ட போரூரா
வென்னைநீ கைவிடா தே. (82)

எவிழியார் பால்விடர்க்கன் பெவ்வாறவ் வாறுனது
சேவடிக்க ணன்புதிக்கச் செய்குவாய்—பூவகத்துத்
தேன்றுளிக்க மீன்றுளிப்பாய் செந்தா மரைத்தடஞ்சூழ்
வான்றுதிப்போ ரூரிலிறை வா. (83)

---

0 சிருட்டிமுதலிய முன்னைய நான்கும் செய்வித்து.

வாராயோ வேழை மனத்தின்கண் வந்திருந்து
தீராத் துயரனைத்துந் தீராயோ—போரூரா
வற்பறு மெய்யடியார்க் காரமுதா யங்கிலகு
சிற்பரா நந்த சிவா. (84)

சிவாவென்ற சொற்குமருத் தீவினையா னாலு
மூவாவின் றொளிபோ லொடுங்கு—நிவாத
விளக்காய்த் துள்க்கறுள மேவுபரா நந்த
மளக்கவல்லா ரார்போரூ ரா. (85)

ஆவின் முதலெழுத்தொன் றெல்லாமாய் வேறுமாய்
மேவுதல்போற் பூதாதி மெய்யிருப்—பாவியங்கு
பூரணனாய் வேறு பொருளாகி நிற்குதியே
லார்போரூ ராநினறி வார். (86)

ஆராய்வார் பாலவரே யாவா யதுவொழிந்த
நீரா ரிடத்துலகாய் நிற்பாயே—போரூர்ச்
சினகரத்தி லெந்நாளுந் தேவதுதி மல்கத்
தினகரனாய் வா$ழுச் சிதா. (87)

சிதாநந் தகனமுத் தேகதக னவற்
புதாநந் தகநாப் புதைகள் *விதானமுறச்
சிந்திக்க வாழ்த்தப் பணியத் திருப்போரூ
ரெந்தா யருளுதியா லீண்டு. (88)

---

$உச்சிதம்-அழகு. *விதானம்-முறை.

சண்டான் டெனும்விகற்ப மெல்லா மழிந்தொழிய
பாண்டுநீ யாய்விளங்கு நன்மையொன்றே—வேண்டுந்
திருப்போரூர் மேவியமெய்த் தேசிகா செந்தா
மருப்புவிடா நாயேற் கருள். (89)

அருளமுதந் தேக்க வடியேற் கருத்தி
மருள்வா சனையையற மாற்றித்—தெருளமைய
நல்லசம ரூரிடையெந் நாளுஞ் சிதம்பரப்பேர்
புல்லிவளர் வாழ்வே புரி. (90)

புரிவென்று நீங்காதுன் பூவடியிற் றோய
விரிவொன் றுளங்குவிவை மேவப்—பரிவின்றி
யின்பம் பெருக விசையாய் திருப்போரூ
ரென்பரமா நந்தா வெனக்கு (91)

எனக்கினியா ரில்லை யிருந்தாலும் வேண்டேன்
மனக்கினிய வின்புதவெம் மானே—தனக்குவமை
யற்றதிருப் போரூ ரரசே யடியேன்பாற்
குற்றமுறி னும்பொறுத்தாட் கொள். (92)

கொள்வாய்போ ரூர்மேவு கோவேபுன் னுவடியேன்
விள்ளு மிசைத்தொடையை வெள்ளையென்று—தள்ளாதே
வெள்ளையின்பாற்கள்ளமொன் றுமேவாமைகொண்டுமுன்சி
நள்ளுரையாய் நிற்பது கொண் டும். (93)

உன்னடியே யென்முடிக்கோர் தென்முடியா வற்றொளிர
வுன்வடிவே யுள்ளத் துறையுளா—மன்னவருள்
செய்யாய் திருப்போரூர்ச் செய்யா சுயஞ்சோதி
யையாமெய் யாயது யா. (94)

ஆதார நீயே யகற்றிலடி யேன்வெறுநா
ளுதா ரகமற் றவனுவேன்—நீதா
சகத்தார் பணியமரூர்ச் சாமீ யபயம்
புகத்தா வடியம் புயம். (95)

புயத்தின் முகமணையப் புல்லியத்தஞ் சென்னி
யிணைத்துரைத்த வோர்சொல் லிருளின்— மயத்தவெலாம்
நீக்கி யமரூரா நின்றநம்பே தத்தினையும்
போக்கியதே யீதற் புதம். (96)

புதனசிதன் பானுகுசன் பொன்னிருபாம் பிந்து
சிதனிவர்கோ பங்களொன்றுஞ் செல்லா—துதிபெருகு
போரூரில் வாழும் புனிதாநின் பொன்னடியி
னூரினர்பா லின்பே நனும். (97)

நண்ணு மனமே நமதுதிருப் போரூரன்
றண்ணளினத் தாணிழலைச் சார்தியே—லெண்ணரிய
புண்ணியமுந் தீயதுன்பப் போக்கும் புனிதமும்பி
னுண்ணிறைபே ரானந்த மும். (98)

உம்முடைய வல்ல வொருபயனு மோதலசி
ரெம்முடையான் போரூ ரிறைவன்றன் —மும்மைப்
பயனுந் தருநேர் பணிந்து துதிசெய்
தியைந்ததுவாய் நிற்பீ ரெனின். (99)

எனினென் பனவோ ரிரூப்பிலிரா வுற்று
னியமாத் தாமதனு னுவே—யினியபொரு
ளொன்றே யதுதிருப்போ ரூரிற் சிதம்பரப்பேர்
தொன்றே யமைந்ததெனச் சொல் (100)

## வாழ்த்து.

பூவளஞ்சேர் கோவினகர் முத்தா நந்த
பூரணனம் போருகப்பூ வடிகள் வாழ்க
காவளஞ்சேர் சோமுவந்தா னகர்மே வன்பர்
கருதுசிவப் பிரகாசன் கழல்கள் வாழ்க
நாவளஞ்சேர் துதிபெருகு சிதம்ப ரப்பேர்
நங்குரவன் பங்கயப்பூ நகைத்தாள் வாழ்க
பாவளஞ்சேர் போரூரந் தாதி யிந்தப்
படிவிளங்கும் படிவிளங்கி வாழ்க மாதோ.

திருப்போரூர் ஸ்ரீசிதம்பரதேசிக ரந்தாதி

சம்பூரணம்.

---



உ

ஶ்ரீ சற்குரவே நம



கோவிற்பட்டி

ஸ்ரீ முத்தானந்த தேசிகர் அதிஷ்டான

# மங்களதின பஞ்சரத்தினம்.



## மங்கலம்.

திங்களி லின்ப நல்குந் தேசிகன் சினக ரஞ்சேர்
மங்கள கால நன்கு வழங்கநா ளுங்கள் வாழ்க
வெங்குமெந் நாளு மொன்று யிருந்தில கின்ப ரூபப்
புங்கவ னென முன்னேன் பொலிமல ரெழிற்செந் தாளே.

உலகமெலா முதித்தொடுங்கு மிடனுய்த் தன்பா
லொருபொருளு நாணரவை யொத்தி லாம
லிலகமலா நந்தசுயஞ் சோதி யொன்றே
யிருவினையால் வருதுயர மூன்றிற் கஞ்சி
மலரணைய கழலடைந்த வடியார்க் கிம்மை
மறுமைமுத்திப் பயன்மூன்றும் வழங்கவேண்டி
யலகறுசீர் முத்தாநந் தப்பேர் கொண்டிங்
காசிரிய சிகாமணியா யவத ரித்தே.

அவதரித்த வாறடியார்க் கருளி யப்பா
லம்மனுடக் குறியகற்றி யசர லிங்க
சிவவடிவா யிவணடியார் முன்னாட் செய்த
சிறந்ததவப் பயனுதவத் தெரிந்த நாளே
புவனிபுகழ் கோவினக ரெனக்கொள் பேரிப்
புரம்பொருளோ டியைந்தென்றும் பொலியவேண்டிக்
குவடெனவற் புதமுறச்செய் பணியா லோங்கு
கோவில்கொண்டு விளங்குகின்ற தெந்நா ளென்னில்

கலியுகமை யாயிரத்து முப்ப தோடு
கலந்தகொல்ல மாயிரத்து நாற்று மூன்றிற்
குலவியவை காசிமதி பத்து மொன்றுங்
கூடியதே தியினல்ல குருவின் வா ர
நிலவுமுத லெழுங்காலத் தைந்தாம் பக்க
திகழ்பூச நாளமிர்த யோகஞ் சேர்ந்த
நலமுதவு மிதுனவிலக் கினநா முய்ய
நங்குரவன் றிருக்கோவில் கொண்ட நாளே

திருந்திய செங்கோல் வாழ்க சீரிய நாடு வாழ்க
பெருந்திரு வியைந்து கோவி னகரினம் பெரிது வாழ்க
மருந்தென முத்தா நந்தன் மலரடி வாழ்க வன்னா
ளிருந்தெழி லிலகுங் கோயி லிசையுற வாழ்க மாதோ

மங்கள தின பஞ்சரத்தினம்

சம்பூரணம்.

---